ஒரு மொழி மற்றொரு மொழியினின்றும் பிறந்தது என்றும், அது திரிந்து வேறுமொழியாயிற்றென்றும், ஒரே மொழியைப் பேசிய மக்கள் பிரிந்து வேறிடங்களுக்குச் சென்றதால், அவ்விடத்திற்கேற்ப மொழிகளும், ஓசைகளும் மாறுபட்டு, வேற்றுமொழியாகுமென்றும், நிலப்பகுதியின் அமைப்புக்கேற்ப மக்களின் பேச்சின் ஒலிகள் மாறுபட அதனால் மொழியின் பண்டைய வடிவம் மாறிவிடும் என்றும், ஒரே இடத்தில் வாழும் மக்களுள்ளும், உயர்ந்தோர் பேசும் மொழியும், இழிந்தோர் பேசும் மொழியும் ஒலி, வடிவம் முதலியவற்றில் மாறுபடும் என்றும், அதனாலும் மொழியின் நிலை வேறுபடும் என்றும் அறிஞர் கூறுவர். எனவே, உலகத்தில் பல வேறுவகைப்பட்ட மொழிகள் தோன்றியுள்ளன. மக்கள், மொழியைத் தோற்றுவித்தபோது சிறுதொகையினராய் இருந்திருத்தல் வேண்டும். இன்றேல் மொழிகள் பரவவும் தலைமுறையாக மரபு கெடாமல் பேசவும் எழுதவும் இயலா.

விந்திய மலைக்குத் தெற்கே கன்னியாகுமரி வரையில் பரந்துள்ள நிலத்தில் வாழ்ந்த மக்கள் அனைவரும் மிகப் பழங்காலத்தில் ஒரே மொழியைப் பேசி வந்தனர் என்பது அறிஞர் அனைவரும் கூறுவதாகும். அம் மொழிக்கு அப்போது எப்பெயரிடப்பட்டது என்பதை உறுதியாகக் கூறமுடியாது. சிலர் தமிழ் என்பது தான் அம்மொழியின் பெயர் என்பர். அம்மொழியினின்றும் பிரிந்த மொழிகளைத் தெலுங்கு, கன்னடம், துளு, மலையாள மொழிகள் என்பர். அண்மையில் அவையனைத்திற்கும் திராவிடமொழியென்னும் பெயர் கூறப்பட்டது. இக்குறியீடு வடமொழி வாணர்களால் இடப்பட்டதே என்பதை அச்சொற்கொண்டே நிறுவி விடக்கூடும். மேற்கூறிய ஐந்து மொழிகட்கும் முதனிலையாகிய சொற்கள் பெரும்பாலும் ஒத்திருந்தன. இறுதி நிலைகள் பின்னர் வேறுபட்டன. வாயால் ஒலிக்கும் முறையால் சில உருவங்கள் மாறின. இடத்திற்கேற்ப அம்மாறுபாடு பெற்றவைகளை வேறுமொழிகளாக் கொண்டனர். அவை வடமொழியின் சேர்க்கையால் பெரிதும் மாறுபட்டு நின்றன. இவற்றுள் தமிழ் மொழியே மிகப்பழைமையானதென்றும், மற்றைய மொழிகளைப் போல் பெரிதும் மாறுபாடடையாமல் இருக்கிறதென்றும் கூறுதல் பொருத்தமேயாகும். தமிழர்கள் தங்கள் மொழிக்குத் தமிழ் என்றே பெயர் இட்டனர். "தமிழென் கிளவியு மதனோரற்றே" என்னும் தொல்காப்பியச் சூத்திரத்தினால் இவ்வுண்மை பெறப்படும். தொல்காப்பியத்தின் காலத்தைப் பற்றிப் பல கருத்து வேறுபாடுகள் இருப்பினும் அது கி. மு. நான்காம் நூற்றாண்டுக்குப் பிற்பட்டதன்று என்னும் கொள்கையை அனைவரும் ஒப்புக்கொள்கின்றனர். 'திராவிடம்' என்னும் பெயர் தமிழ் இலக்கணங்களிலும், பண்டைய இலக்கியங்களிலும் காணப்படவில்லை. அதனால் அப் பெயரால் தமிழ் முதலிய ஐந்து மொழிகள் அழைக்கப்பட்டன என்றல் பொருந்தாக் கூற்

ரும். அம் மொழிகளின் மரபு கெடாதிருக்கும் பொருட்டு இலக்கணங்கள் தோன்றின.

தமிழ் மொழிக்கு முதன் முதல் அகத்தியர் இலக்கணம் எழுதினர். அதன்பின் அவர் மாணவராகிய தொல்காப்பியர் தொல்காப்பியம் என்னும் இலக்கணம் எழுதினர். அவருக்குப்பின் காக்கைபாடினியார், நத்தத்தனார் முதலியோரும் சில இலக்கணங்களை எழுதினார்கள். நேமிநாதம், வீரசோழியம், யாப்பருங்கலம், யாப்பருங்கலக்காரிகை, நன்னூல், இலக்கணக் கொத்து, பிரயோக விவேகம், இலக்கண விளக்கம், தொன்னூல், முத்துவீரியம், முதலிய இலக்கணநூல்களும் தோன்றின. இத்துணை நூல்கள் தோன்றுதற்குக் காரணம் என்ன? இக் காலத்து ஒரு பொருள் பற்றியே பல பாட புத்தகங்களை எழுதி வெளியிட்டுப் பொருள் தேட முயல்வதுபோல் அவர்கள் செய்தனரா? அல்லது வேறு கருத்துக்கள் உண்டா? எனில், உண்டு. சில் வாழ்நாள் பல்பிணிச் சிற்றறிவுடைய மக்கள் எளிதில் உணர்ந்துகொள்ள முடியாதபடி அகத்திய இலக்கணத்தில் இயல், இசை, நாடகங்களின் விதிகளும் பிறவும் மயங்கியிருந்தமையால் தொல்காப்பியர் தம்கால மக்களின் நிலைக்கு ஏற்ப விதிகளை முறைபடுத்தி எளிதாக்கித் தொல்காப்பியம் என்னும் இலக்கணத்தை எழுதினர் என்பர் நச்சினார்க்கினியர் முதலிய உரையாசிரியர்கள். காலம் செல்லச்செல்ல மொழிகள் பல மாறுபாடுகளை அடைகின்றன. மக்கள் பேச்சினின்றும் அம்மாறுகள் கொள்ளப்படுகின்றன.

மக்கள் எப்போதும் எளிய முறையிலேயே எந்தச் சொல்லையும் சொல்ல விழைகின்றனர். திருத்தமான சொற்களை ஆள்வதில் வருத்தம் உண்டாவதாகக் கருதி அவற்றைக் குறுக்கி ஒலிக்கின்றனர். வேற்றுமொழிச் சொற்களும், அவற்றின் செல்வாக்கும் பிறநாட்டினரின் கூட்டுறவால் ஏற்பட்டுச் சில சொற்கள் புதியனவாக ஏற்றுக்கொள்ளப்படுகின்றன. சில சொற்கள் ஆட்சியினின்றும் மறைகின்றன. இவற்றிற்குப் பொறுப்பு யார் என்று கூறவியலாதாயினும் மக்களே இம்மாறுபாடுகளுக்குரியர் எனல் வேண்டும். அவர் தம்முள்ளும் உயர்ந்தோர் ஆட்சியிலுள்ள சொற்கள் இலக்கியங்களிற் சேர்க்கப்படுகின்றன. அவற்றிற்குத் தக்கபடி புதிய விதிகளை இலக்கணங்களில் சேர்த்தல் இன்றியமையாததாகின்றது. தவிர, காலம் செல்லச்செல்ல மக்கள் இலக்கண விதிகளை மிக எளிதில் கற்றுக்கொள்ளவே விரும்புகின்றனர். ஆகவே, அவ்வப்போது பல இலக்கண நூல்கள் தோன்றலாயின.

இலக்கண நூலாசிரியர்களேயன்றி உரையாசிரியர்களும் தம் உரைகளில் புதப்புது விதிகளை உரையிற் கோடலினாலும், இலேசினாலும், உடம்படு புணர்த்தலினாலும், சொல்லாற்றலினாலும் வேறு பிற உத்திகளானும்

புகுத்தியிருக்கின்றனர். அவற்றைக் கூர்ந்து கற்றறிந்தவர் மொழி எவ் வகை மாறுபாட்டை எப்போது ஏன் பெற்றது என்பதை நன்கு உணரக் கூடும்.

தொல்காப்பியத்துக்குப் பின் பெரும்பான்மையோர் கற்பது நன் னூலே. சின்னூல் முதலியவைகள் மிகுதியும் கற்கப்படுவதில்லை. நன்னூல், தொல்காப்பியம் தோன்றி ஏறக்குறைய மூவாயிரத்தைந்நூறு ஆண்டு களுக்குப்பின் எழுந்தது. நன்னூலார் காலத்தில் தமிழ் மொழியில் வேறு பாடுகள் பல உண்டாயின. வடமொழிக் கலப்பு மிகுந்தது. பவணந்தி முனிவர் ஆருகத சயமத்தினர் ஆதலின் அவருக்கு வடமொழிப் புலமையும் உண்டு. தமிழ் மொழியில் வடமொழி இலக்கணத்தை மிகுதியும் புகுத்திய வர்கள் ஆருகத சமயத்தவரே. அவர்கள் தமிழுக்குத் தொண்டு செய்தன ரெனினும் வடமொழியைத் தமிழிலக்கண விதியோடு ஒன்றுபடுத்தித் தனித் தமிழ் கற்பவர்கட்கு அம்மொழிகளின் வேற்றுமையை அறியவொட்டா மற் செய்து போயினர். உரையாசிரியர்களிற் பெரும்பாலோர், சில விதி களைக் கூறுமிடத்து, "இது வடமொழியோடு மாறுபடுதலின் பொருந் தாது" எனவும், "இது வட நூலார்க்கும் கருத்தன்று" எனவும், "வட நூல் உணர்ந்தார்க்கன்றித் தமிழியல்பு விளங்காது" எனவும் கூறி வட மொழியின் பற்றுக் காரணமாகத் தமிழ் கற்பதற்கு அது பெரிதும் வேண் டப்படுவதென்றும் உணர்த்தித் தனித் தமிழிலக்கண நூல்களுள் அவ்வட மொழியிலக்கண நூற் கொள்கைகளைப் புகுத்தினர்.

இம் முறைக்குத் தொல்காப்பியரும் ஒருவகையில் காரணமாவார் என் றும், "வடசொற் கிளவி வடவெழுத்தொரீஇ எழுத்தொடு புணர்ந்த சொல் லாகும்மே" என்னும் விதியாலேயே இம்முறை ஏற்பட்டது என்றும் ஒரு சிலர் கூறுகின்றனர். தொல்காப்பியர் வேற்றுமொழி வேண்டாம் என் னும் கொள்கையினர் அல்லர். வடமொழியிலக்கணமாகிய ஐந்திர இலக் கணத்தை அவர் நன்கு கற்றவர். "ஐந்திரம் நிறைந்த தொல்காப்பியன்" என்றது காண்க. அவர் காலத்தில் வடமொழிச் சொற்கள் தமிழில் அரு கியே பயின்று வந்தன. அவரும் தமிழின் தூய்மையைக் கெடுக்கக்கூடா தென்னும் கொள்கையினரே. ஆதலின், ஆரியச் சொற்கள் தமிழ் எழுத் துக்களால் எழுதப்படின் தமிழ் நூல்களில் ஆளலாம் என விதி வகுத்தனர். மொழி, கால வேறுபாட்டால் மாறுவது இயற்கை என்பதை உணர்ந்தே "கடி சொல்லில்லை காலத்துப் படினே" என மொழிவளர்ச்சிக்கு வழி யும் கோலினர் எனக் கொள்ளவேண்டும்.

தொல்காப்பியர் காலத்தில் வழங்கிவந்த சொற்களிற் சில பிற்காலத்தே வழக்கு வீழ்ந்தன. புலவர்கள் சில சொற்களை ஆட்சியிற் கொணராதிருப் பார்களாயின் பல ஆண்டுகட்குப்பின் அவை வழக்கொழிகின்றன. இம் முறை எல்லா மொழிகளிலும் காணப்படுகின்றன. அதோளி, இதோளி

முதலிய சுட்டுப்பெயர்கள் அதோள், இதோள், அதோ, இதோ என மாறிப் பின் அறவே ஒழிந்தன. தொல்காப்பியத்தைக் கற்போர் இவ்வுண்மையை உணர்வர். உரையாசிரியர்கள், தாம் வரலாற்று முறையிற் கேட்டறிந்த இச் சொற்களை எடுத்துக் காட்டாதொழியின், இக் காலத்து நமக்கு, "சுட்டு முதலாகிய இகர விகுதியும்" என்பனபோன்ற சூத்திரத்திரங்கட்குப் பொருள் அறியுமாறில்லை. ஒரு காலத்து ஒரு பொருளில் வழங்கிய சொல் பிற்காலத்தில் வேறு பொருளில் வழங்குகின்றது. பெண்டாட்டி என்னும் சொல் தொல்காப்பியர் காலத்தில் பெண்களுக்குப் பொதுப் பெயராக வழங்கி வந்திருந்தது. இப்பொழுதோ வெனில் மனைவி என்னும் பொருளில் அது வழக்காற்றில் வந்துளது. இங்ஙனம் உள்ள சொற்கள் பல. இம் மாறுதல்களுக்கு யார் காரணம் என்பதை எங்ஙனம் கூறுவது? இவை யனைத்தும் மக்கள் இயல்பு என்று தான் முடிவு செய்தல் வேண்டும்.

இலக்கண இலக்கியங்களின் தோற்றத்திற்கும், அவற்றின் வேறுபாடுகளுக்கும் வளர்ச்சிக்கும் அவ்வக் காலத்து மக்களே காரணமாகின்றனர். அம்மக்கள் பிற மக்களோடு கூட்டுறவு கொள்ளுதலாலும் அவர் தம் நாகரிகத்தை மேற் கொள்ளுதலாலும் மொழிகளிற் சில மாறுதல்கள் உண்டாகின்றன. எனவே புதுப் புது இலக்கியங்களும் தோன்றுகின்றன. உயர்ந்த மக்கள் சொற்களை ஒலிக்கும் முறைக்கேற்ப இலக்கணங்கள் கூறப்படுகின்றன.

இலக்கியங்களையும், உயர்ந்தோருடைய மொழி ஆட்சியையும் நோக்கி இலக்கண வரம்புகள் செய்யப்பட்டன. வழுவமைதிகளும், மரபுச் சொற்களும், மரூஉ மொழிகளும் இவற்றில் அடங்கும். இதுபற்றியே "வழக்கும் செய்யுளும் ஆயிரு முதலின்" எனப் பனம்பாரனார் கூறினர். வழக்கினை முற் கூறியவதனால் செய்யுளினும் வழக்கே இலக்கண அமைதிக்குச் சிறந்ததென்பது போதரும்.

மக்கள், சொற்களை எளிதில் ஒலித்தலையே விரும்புவர் என்பது மேலே சொல்லப்பட்டது. அம் முயற்சியில் சில சொற்களைக் குறைத்தும், சில வற்றைப் பெரிதாக்கியும் ஒலிப்பர். உறந்தை என்பது உறையூரின் மரூஉ. அருமருந்தன்ன என்பது அருமந்த என ஒலிக்கப்பட்டது. ஆதன் தந்தை என்பது ஆந்தை எனவும், பூதன் தந்தை பூந்தை எனவும் ஆயின. என் தந்தை என்பது எந்தை எனப்பட்டது. இவைபோல் குறுக்கி ஒலிக்கப் பெற்ற சொற்கள் பல காணப்படுகின்றன. வேற்றுமைத் தொகை முதலி யனவும் அன்ன. சுருங்கச் சொல்லுதல் என்பதனை நூலிற்குச் சிறந்த அழகெனவும் கொண்டனர்.

அ, இ, எ என்னும் இடைச் சொற்கள் அந்த, இந்த, எந்த என வளர்ந்தன, அவ், இவ், உவ் எனும் பன்மைச் சுட்டுப் பெயர்கள்

அவை, இவை, உவை என்றாயின. இவை வேறு வேறு சுட்டுப் பெயர்கள் என்பர் ஒரு சிலர். உண், தின், சொல், என் என்பன போன்ற சொற்கள் உகரச்சாரியை சேர்க்கப்பட்டு உண்ணு, தின்னு, சொல்லு, என்ளு என ஒலிக்கப் பெற்றன.

நிலைமொழி வருமொழிகள் புணருமிடத்துச் சில சொற்களின் எழுத்துக்களைத் திரித்து ஒலிப்பர். மயக்க விதி இன்மையின் இவை திரிந்தன என்பர் உரையாளர். மயக்க விதியாவது ஓரெழுத்து மற்றோரெழுத்துடன் ஒன்றி ஒலிக்குங்கால் அவற்றின் பிறப்பிடம், முயற்சி ஆகியவை பெரிதும் வேறுபடுமிடத்து அவ்வொலிகளை ஒன்று சேர்த்து ஒலித்தல் முயற்சியுள் எளிதாகாமல் இருந்தால் ஒத்த முயற்சியுடைய எழுத்துக்களாகத் திரிக்கப்படுகின்றன. இவையும் ஒலித்தலின் எளிமை கருதியே யென்க. எடுத்துக்காட்டாக அவ்+கடிய; அல்+திணை என்பவற்றைக் கொள்ளலாம். இவற்றுள் நிலைமொழியின் ஈற்றில் உள்ள இரண்டும் இடையின எழுத்துக்கள். வருமொழியிலுள்ள எழுத்துக்கள் இரண்டும் வல்லினம். முயற்சியுள் வகரம் மேலுதடும் கீழுதடும் பொருந்துவதனால் பிறக்கும். ககரம், அடிநா அடி அண்ணத்தைப் பொருந்துவதனால் பிறக்கும். இவ்விரண்டும் மயங்குதற்கண் ஒலியில் அருமை தோன்றும். எனவே அவ்வகர மெய் ஆய்த எழுத்தாகத் திரிக்கப்படுகின்றது. அதனால் ஒலித்தலின் முயற்சி எண்மையாகின்றது. அல் திணை என்பதும் இம்முறையானே அஃறிணை என்றாயிற்று. கல்+தீது என்பது கஃறீது எனவும், கற்றீது எனவும் வருதல் போல அல்+திணை, அஃறிணை யென்றும் அற்றிணை எனவும் ஒலிக்கப்படுதல் வழக்கில் இல்லை. அற்றிணை என்பது குறித்த பொருளைத் தாராமல் அற்று இணை எனப் பொருள் கொள்ளப்பட்டு மயக்க மெய்துவிக்குமாதலின் அவ்வாறு ஒலிக்கப்படவில்லை. இவற்றுள் அஃறிணை என்பதில் உள்ள ஆய்தம் குறுகிக் கால் மாத்திரையாயிற்றென்பர் நன்னூலார். அங்ஙனமாயின் இடையினமெய் ஈறும் வல்லின முதலும் புணருங்கால் தோன்றிய ஆய்தமும் குறுகுதல் வேண்டுமன்றோ? குறுகுதற்கு இடமும் வரும் எழுத்தும் கருவியாகுமானல் அஃகடிய என்பதனையும் ஆய்தக் குறுக்கம் என்பதன்றோ பொருத்தம்? ஒன்றை ஆய்தக் குறுக்கமென்றும் மற்றொன்றை முற்றாய்தம் எனவும் கூறுதல் முரண்பாடுடையதாகும். இரண்டும் முற்றாய்தங்களே யன்றிக் குறுக்கமில்லை என்பதை ஒலித்துக் காண்க. சிவஞான முனிவர், நன்னூல் விருத்தியுரையில் ஆய்தக் குறுக்கத்தைக் கூறுமிடத்து, ஆய்தக் குறுக்கத்திற்குக் "காண்டல் விரோதம் கூறவாருமுளர்" என்று கூறினரே யன்றி அதனைத் தெளிவுபடுத்தவில்லை. இலக்கண விளக்க நூலுடையார் இவ்வாய்தக் குறுக்கத்தைக் கூறிற்றிலர். தொல்காப்பியரும் கூறிற்றிலா. பவாநந்தம் பிள்ளையவர்கள் உரை யெழுதிப் பதிப்பித்த போகத்தியத் திரட்டு என்னும் நூலில், "வளவிற

புணர்ச்சியாம் ஆய்தம் குறுகும்'' என்னும் சூத்திரம் காணப்படுகிறது. அதனை அகத்தியனார் எழுதியதெனக் கொண்டு மயங்கி இவ்வாய்தக் குறுக்கமும் உண்டு எனக் கொள்வர் ஒரு சிலர். யாப்பருங்கல விருத்திகாரரும் ஆய்தக்குறுக்கம் கொண்டனர். இதனையே நன்னூலாரும் பின்பற்றினர் என்றும் அவர்கள் கூறுவர். தொல்காப்பியத்திற்கு அகத்தியம் முதனூலாய் இருக்க அவர் அதனை மேற் கொள்ளாதது என்? 'இப்போகத்தியத்திரட்டு' அகத்திய முனிவரால் செய்யப்பட்ட அகத்தியம் அன்று என்பதை அச்சூத்திரங்களின் அமைப்பைக் கொண்டே கூறிவிடலாம். அதில் வடமொழிகள் கலந்துள்ள சூத்திரங்களே பெரும்பாலன. அதன் நடையை நோக்குங்கால் பிற்காலத்து ஒருவர் அந்நூலை யியற்றி அதற்குப் போகத்தியம் என்று பெயரிட்டிருத்தல் வேண்டும் எனலாம். சிற்றகத்தியம் என்று மற்றொரு இலக்கண நூல் உளதென்றும் சிலர் கொள்கின்றனர். அகத்தியர் பெயரால் மருத்துவ நூல்களும் சோதிட நூல்களும் வெளிவந்துள்ளமை பலரும் அறிந்ததே. ஊர் பேர் தெரியாத ஒருவர் இவைகளை எழுதி அவற்றிற்கு அகத்தியர் பெயரை இட்டது போல இவ்விலக்கணமும் செய்யப்பட்டுள்ளது என்பது அறிஞர் பலர்க்கும் ஒப்பமுடிந்ததாகும். எனவே, இந்நூல் நன்னூலார் காலத்துக்குப் பின் ஒருவரால் எழுதப்பட்டிருத்தல் வேண்டுமென்பது தெளிவு. அகத்தியம் என்பது ஒரு முழு நூலே யன்றி அது சிற்றகத்தியம், போகத்தியம் எனப் பாகுபடுத்தப் பெற்று வழங்கிவரவில்லை என்பதையும் அறிதல் வேண்டும்.

தவிர, நன்னூலார் சார்பெழுத்துக்களுக்கு விரி கூறுவதைச் சற்று நோக்குவோம். முற்றாய்தம் எட்டு என்று கூறி வல்லின உயிர்மெய் ஆறன் முன்வரும் ஆய்தம் ஆறனோடு விரித்தல் விகாரத்தால் வரும் ஆய்தம் ஒன்றும் திரிதல் விகாரத்தால் வரும் ஆய்தம் ஒன்றும் கூட்டி எட்டு எனக் கணக்கிட்டனர். ஆய்தம் என்பது ஒன்றே. ஆறு வல்லின மெய்யின் முன்வரும் ஆய்த எழுத்துக்களும், மற்றைய ஆய்தங்களும் எவ்விதமான வேறுபாடும் கொள்ளப்படாமல் ஒலித்தலின் ஆய்தம் ஒன்று எனவே சாலும். ஆதலின் எட்டு என்னும் விரி வேண்டுவதன்று; வேண்டுவதாற் பெரும் பயனுமில்லை.

ஆய்த வெழுத்துக் கேடகம் என்னும் ஆயுதம் போன்றிருத்தலினாலும், அடுப்புக் கூட்டுக் கொம்மை போன்றிருத்தலினாலும் ஆயுதம் என்னும் வடமொழிப் பெயர் சிதைந்து ஆய்தம் என்று பெயரிடப்பட்டது எனக் கூறுவர் சிலர். தமிழெழுத்திற்கு வடமொழிப் பெயர் எங்கும் இடப்படவில்லை. ஆயுதம் என்னும் சொல் ஆய்தம் எனத் திரிதற்கு ஆதாரமும் இல்லை. எனவே, அஃது ஆயுதம் என்னும் வடமொழிப் பெயரன்று; தமிழ்ப் பெயரே யாம். ஆய்தல் என்னும் உரிச் சொல்லுக்கு உள்ளதன் நுணுக்கம் என்பது பொருள் என்று,

"ஒய்தல் ஆய்தல் நிழத்தல் சாஅய்
ஆவயி னன்கும் உள்ளதன் நுணுக்கம்"

என்றும், நலிவு வண்ணம் ஆய்தம் பயிலும் என்றும், தொல்காப்பியர் கூறியுள்ளார். எனவே, நலிந்த, அல்லது நுணுகிய ஓசையுடைய எழுத்தே ஆய்தம் எனப்பட்டதென்க. பக்கல் என்பது பக்கம் என்றாயது போல ஆய்தல் என்பது ஆய்த மெனப்பட்டதென்றேனும், ஆய்+த்+அம் எனப் பிரித்து அம் என்பதைத் தொழிற் பெயர் விகுதியாகவும், த் என்பதை எழுத்துப் பேறாகவும் கொள்ளலாம் என்றேனும் கூறுக.

குற்றியலுகாரமும் முப்பத்தாறு என்றனர். அம்முப்பத்தாறுக்குத் தெளிவு கூறிய உரையாசிரியர்கள் அனைவரும் ஒவ்வொரு முறையைக் கையாண்டனர். அதுபற்றிக் கருத்து வேறுபாடுகள் தோன்றின; மறுப்புக்களும் மலிந்தன. தொல்காப்பியர் ஈற்றய லெழுத்தை நோக்கி ஆறாகக் கொண்டது புணர்ச்சிக்கு அவை பயனுதலை நோக்கியே யாம். அவ்வாறு கோடலே இன்றியமையாததுவும் ஆகும். அம்முறையைவிட்டு இடமும் பற்றுக் கோடும் காரணமாக முப்பத்தாறாக விரி கொண்டது கற்பார்க்கும் உரையாளர்க்கும் இடர்ப்பாட்டினை விளைப்பதன்றிப் பயன்படுதல் இல்லை. குற்றியலுகாரத்தை வேறெழுத்தாகவே அனைவருங் கொண்டனர். இதற்குக் காரணம் ஒலி வேற்றுமையும், புணர்ச்சி வேறுபாடும் பொருள் வேறுபாடுமே யாம். ஒலி வேற்றுமையாதல் அரை மாத்திரை பெறுதல். புணர்ச்சி வேறுபாடாவது உயிர் வரக் கெடுதலும், யகரம் வர இகரமாதலும், வல்லினம் முதலியவை வரத் தொடர்ந்த எழுத்துக்கேற்ப வேறுபடுதலும் ஆம். பொருள் வேற்றுமையாவது ஒரு சொல்லே எடுத்த லோசையால் மாத்திரை குறையாமல் வினை முற்றாதலும், படுத்த லோசையால் மாத்திரை குறைந்து பெயர்ச் சொல்லாதலும் ஆம். எடுத்துக் காட்டாக, காது என்னும் சொல் எடுத்துச் சொல்லும் போது கொல்வாய் எனப் பொருள்படும் ஏவல் வினைமுற்றாய் முற்றியலுகாரமாதலும், அதையே படுத்துச் சொல்லின் காது என்னும் உறுப்பின் பெயராய்க் குற்றுகரமாதலும் கொள்ளப்படும் இதனை,

முற்றிய லுகரமொடு பொருள்வேறு படாஅ
தப்பெயர் மருங்கின் நிலையிய லான (மொழி - 35.)

என்னும் சூத்திரத்திற்கு நச்சினார்க்கினியார் எழுதிய உரையிற் காண்க. வடமொழியில் குற்றியலுகாரம் இல்லை. ஆகலின், வடசொற்களை உதாரணங் காட்டுதலும் ஆகாது. குற்றியலுகாரத்திறுதி முன்னிலை வினைக்கண் வாரா தென, "குற்றியலுகரத் திறுதியும் உள்பட, முற்றத்தோன்றா முன்னிலை மொழிக்கே" (தொல் எழு) என்று விதி கூறியிருத்தலின், முன்னிலை வினைச் சொற்களை எடுத்துக் காட்டுதலும் பொருந்தா. எனினும், இக்காலத்தில்

ஒரு சிலர் நான்கின் உருபு சேர்ந்த பெயர்களையும், வடசொற்களையும் குற்றியலுகரத்திற்கு உதாரணங் காட்டுதல் இயையாதென்க. இக் குற்றியலுகரம் விகாரப்பட்ட எழுத்தாயினும் இஃது இயல்பாய் வந்த வேறெழுத்தென்றும், குற்றியல் உகரம் என்பதில் இயல் என்னும் சொல்லே இக் கருத்தினை அறிவிக்குமென்றும் சிவஞான முனிவர் பாயிர விருத்தியில் கூறியுள்ளார்.

எடுத்தல் படுத்தல் முதலிய ஓசை வேறுபாட்டால் பொருள் வேறுபடும் வேறு சொற்களும் உள. அவற்றுள் 'தபு' என்னும் சொல் இரு பொருளில் வரும் எனத் தொல்காப்பியர் கூறியது காண்க. அதற்கு விதி,

"உப்ப காரம் ஒன்றென மொழிப
இருவயின் நிலையும் பொருட்டா குமே" (தொல். எழு. மொழி.)

என்பது. எடுத்து ஒலித்தால் இச்சொல் பிறவினைப் பொருளையும் படுத்து ஒலித்தால் தன் வினைப் பொருளையும் தரும் என அதற்கு உரை கூறியதையும் நோக்குக. இதனாலும் ஒலி வேறுபாட்டால் மொழியின் பொருள் வேறுபாடு உண்டாமெனவும், மக்களது வழக்கே இலக்கண விதிகட்குக் காரணம் எனவும் அறிகின்றோம்.

அளபெடையின் விரி இருபத்தொன்று என்று கூறிய நன்னூலார் கருத்துக்கேற்ப, மொழி இடை கடைகளில் வாராத ஔகாரம் இரண்டினையும் விலக்கி அவற்றிற்கு ஈடாக இன்னிசை, சொல்லிசை யளபெடைகளைக் கூட்டி நிரப்பி உரையாசிரியர்கள் பலரும் இடர்ப்பட்டுள்ளார்கள். இவ்விரிவும் வேண்டப்படுவதன்று. நெட்டெழுத்துக்கள் ஏழும் அளபெடுத்தலால் உயிரளபெடை ஏழு என்பதே சாலும். இலக்கண விளக்கமுடையார் இம்முறையில் உயிரளபெடை ஏழு என்றே கூறியுள்ளதுதான் இயைபுடைத்து. நெடில் மூன்று மாத்திரையாய் விகாரப்பட்டு ஒலிக்குமோ, இனக் குற்றெழுத்துக் கூடிநின்றே அவ்வாறொலிக்குமோ என்னும் ஐயுறவால் பலவகைக் கருத்துக்கள் கூறப்படுகின்றன. அறிஞர்கள் இதுபற்றி ஆராய்ச்சிக் கட்டுரைகள் பல எழுதியிருத்தலின், நெடில் மூன்று மாத்திரையாக ஒலிப்பதற்குக் குற்றெழுத்தின் சேர்க்கையே காரணம் என்றும், குற்றெழுத்து அறிகுறியாய் நிற்கும் என்னும் கொள்கை பொருந்தாதென்றும் சுருங்கக்கூறி நிறுத்திக்கொள்கிறேன்.

இனி, எழுத்துக்களைப் பற்றி ஒரு சிறிது ஆராய்வோம். தொல்காப்பியர் காலத்திற்கு முன்பே எழுத்துக்களுக்குப் பெயர் இடப்பட்டது. கிடக்கை முறையும் ஏற்பட்டது.

"எழுத்தெனப் படுவ
அகர முதல் னகர இறுவாய்
முப்பஃ தென்ப" (தொல். எழு. நூல். 1.)

எனச் சான்றோர், முதலெழுத்துக்களுக்கு கிடைக்கை முறையையும் பெயரையும் ஏற்படுத்தினர் என்று கூறுவார், 'எனப்படுவ' என்றும் 'என்ப' என்றும் கூறினர். ஆதலின், இப் பெயர்களும் முறையும் எப்போது யாரால் முதன் முதலில் ஆட்சியில் கொணரப்பட்டன வென்று கூறுதல் எளிதன்று. எனினும், அகத்தியர் காலத்திற்கு முன் இவை நடைமுறையில் இருந்திருத்தல் கூடுமென ஒருவாறு உய்த்துணர்ந்தறியலாம்.

இக் கிடக்கை முறைக்குக் காரணம் கூறும் உரையாசிரியர்கள் பலரும், தமிழுக்கே சிறப்பெழுத்துக்களாவன ழ, ள, ற, ன ஆகியவை என்றும், வடமொழிக்கும் தமிழுக்கும் பொது வெழுத்துக்களின் பின் சிறப்பெழுத்துக்களை ஈற்றில் வைத்ததே முறையென்றும் கூறியுள்ளனர். அங்ஙனமாயின், வடமொழி எழுத்துக்களிற் பல தமிழில் வழங்கப்பட்டன வென்று கொள்வதா? தமிழுக்கு எழுத்துக்கள் அமைந்தபின் வடமொழியை நோக்கியபோது இருமொழிக்கும் பொதுவான சில எழுத்துக்கள் இருந்ததைக் கண்டு அவற்றைப் பொதுவெழுத்தென்று வழங்கினர் எனக் கொள்வதா? என்னும் ஐயம் தோன்றுவது இயல்பே.

தமிழுக்கு உரிய இலக்கணம் தனிப்பட்டதென்றும், முடிபுகளும் பிற இலக்கண விதிகளும் வடமொழி இலக்கணத்திற்கு வேறுபட்டுள்ளன வென்றும் யாவரும் அறிவர். எனவே, எழுத்துக்களும் தமிழுக்கெனவே ஆக்கிக் கொள்ளப்பட்டனவென்பதுதான் பொருத்தம். சில ஒற்றுமை கண்டுழி அவற்றை இருமொழிக்கும் பொது எனக்கொண்டனர் போலும். ஒரு சில உரையாசிரியர்கள் தொல்காப்பியர் ஐந்திர வியாகரணத்தை அறிந்தவராதலின் வடமொழியிலக்கணத்தோடு மாறுபடாமலே தம் இலக்கணத்தை எழுதினர் என்றும், வடநூல் உணர்ந்தார்க்கன்றித் தமிழியல்பு விளங்காதென்றும், வடநூற்கருத்தோடு மாறுபடுகின்ற விதிகள் ஆசிரியர்க்கு உடன்பாடல்லவென்றும் கூறித் தமிழ்மொழி வடமொழியின் துணை கொண்டே வளர்ந்து வழக்காறுற்றதென்று கூறியுள்ளனர்.

தமிழ்மொழி தனித்தியங்கும் உயர்தனிச் செம்மொழி. அதனுள் காலவேறுபாட்டால் பல வடநூற் கருத்துக்கள் புகுத்தப்பட்டன. பல்லவ அரசர்கள் வடமொழியை மிகுதியும் ஆதரித்து வந்தமையால் அவர்கள் காலத்தில் இலக்கணங்களில் வடமொழி விதிகள் அக்காலப் புலவர்களால் சேர்க்கப்பட்டன. அதனால், மொழி ஒருவாறு வளர்ச்சியடைந்ததென்றே கொள்ளவேண்டும். எனினும் அவை இன்றியமையாதவல்லன என்பதையும் உணர்தல் வேண்டும்.

அக்காலப் புலவர்களில் ஒரு சிலர் தமிழ் மொழியையும் வடமொழியையும் வேறு வேறாகக் கருதாமல் ஒன்றெனவும் கருதி வந்தனர். தமிழ் மொழியில் யகரம் ஆகாரத்தோடன்றி மொழிக்கு முதலாகாது என்றனர்

தொல்காப்பியர். எனவே, யா என்னும் எழுத்தை முதலாகக் கொண்ட சொற்கள் தமிழ் மொழியில் வழங்கப்பட்டனவென்றும், அவ்வருக்கத்தில் பிற எழுத்துக்கள் தமிழ் மொழியில் மொழிக்கு முன் வருதல் இல்லை என்றும், அவ்வாறு வேறெழுத்துக்கள் மொழி முதலாயின் அவை தமிழ் மொழியல்ல வென்றும் அவர் அறிவித்தாராவர். அவர் தமிழுக்கே இலக்கணம் செய்ததால் அங்ஙனம் கூறினர்.

அவருக்குப் பின்வந்த புத்தமித்திரர் என்பார் தம் வீர சோழிய நூலில், வடமொழிகளையும் தமிழெனக் கருதி வேறுபாடுணராமல் யகரம் அ, ஆ, உ, ஊ, ஓ, ஔ என்னும் ஆறெழுத்துக்களோடுங் கூடி மொழிக்கு முதலில் வரும் எனவும், அவை செந்தமிழ்ச்சொல் எனவும், சகரக்கிளவும் அ, ஐ, ஔ ஆகிய எழுத்துக்களோடு மொழி முதலாம் எனவும் கூறினர். யவனர், யுகம், யூபம், யோகம், யௌவனம், சையம், சௌரியம் என்பன வடமொழிகள். இவற்றையும் அவர் தமிழ்மொழி என்று கூறினர் என்றால் அவர் வடசொற்களைத் தமிழ் என்று கொண்டனர் என்றும், மொழி வேறுபாடற்றவர் என்றும் கொள்ள இடம் உண்டு. அவர் கூறியது,

> " ஆவி யனைத்தும் கசத நபமவ வரியும்வவ்வில்
> ஏவிய எட்டும்யவ் வாறும்ஞந் நான்குமெல் லாவுலகும்
> மேவிய வெண்குடைச் செம்பியன் வீரரா சேந்திரன்றன்
> நாவியல் செந்தமிட் சொல்லின் மொழிமுதல் நன்னுதலே "

என்னுங் காரிகை. இந்நூல் கி. பி. 11-ம் நூற்றாண்டின் வீரராசேந்திர சோழன் காலத்து அவன் பெயரால் எழுதப்பட்டது. நேமிநாத நூலுடையார் யகரம் ஆ, ஓ, ஔ என்னும் மூன்றெழுத்துக்களோடும் மொழி முதலாமென்றனர். இவர் கி. பி. 12-ம் நூற்றாண்டின் முற்பகுதியில் வாழ்ந்தவர். அந் நூற்றாண்டின் கடைப்பகுதியில் வாழ்ந்திருந்த பவணந்தி முனிவர் வீரசோழியத்தைப் பின் பற்றினர்.

இங்ஙனம் சூத்திரம் செய்ததால், மாணக்கர்கள் எது தமிழ்மொழி எது வடமொழி என அறியாமல் இடர்ப்படுவர். அப்புலவர்கள் அனைவரும் சமணர்கள். அவர்கள் வடமொழியிலும் தமிழிலும் பெரும் புலமையும் பற்றும் உள்ளவர்கள். இரு மொழிகளிலும் நூல்கள் செய்து இலக்கிய இலக்கணங்களை வளர்த்தனர். மொழி வேற்றுமையின்றிச் செய்த சில விதிகள் இன்று மொழியை ஆராய்வார்க்குப் பெரிதும் இடர்ப்பாடு பயக்கின்றன. வடமொழி இலக்கணங்களைத் தமிழ் இலக்கணத்தில் நுழைத்து இரண்டிற்கும் வேறுபாடறியாமல் நூல்களை யாத்தனர் என்று ஒரு சிலர் வருந்துகின்றனர். வடமொழி தமிழில் பெரும்பாலுங் கலந்துள்ளமையால் அதற்கு இலக்கணம் வேண்டாவோ? எனின் வேண்டும். அவ் விதிகளைத் தனியாக அமைத்திருந்தால் மிக நன்றாகவிருக்கும். நன்னூ

லில் வடமொழியாக்கம் என்னும் தலைப்பில் சில சூத்திரங்கள் காணப் படுகின்றன. ஆங்கு மற்றைய இலக்கணங்களைபும் கூறியிருத்தல் வேண் டும். முன்னூலாகிய தொல்காப்பியத்திலும் பின்னூலாகிய இலக்கண விளக்கத்திலும் இக் குறைகள் இல்லை. இடைப்பட்ட காலத்து நூல்களில் மட்டுமே இக் குழப்பம் உண்டு.

இதனால், வடமொழியிலக்கணம் தமிழுக்கு வேண்டாமென்று கூறு கின்றேனல்லேன். அஃது இன்றும் தமிழுக்கு வேண்டற்பாலதாயிற்று. இக் கூட்டுறவினால் மொழி வளர்ச்சியும் ஏற்பட்டது. இதற்காகத் தமிழின் தூய்மை கெடாதபடி இலக்கணங்களை வகுத்து வடமொழி இலக்கண விதி களையும் தனியாக அமைத்து அறிவுறுத்துதல் நலம்.

பிற்காலத்து உரையாசிரியர்கள், இலக்கண நூல்களிற் கூறப்படாத-பிற்காலத்தார் மேற்கொண்ட-சில விதிகளை உரையிற் கோடல் முதலிய உத்திகளால் விளங்க உரைத்திருக்கின்றனர். அவை, சில விகுதிகளும், முதனிலை முதலியவற்றை முடித்துக் காட்டலும், இடைநிலைகளை எடுத் தோதுதலும் போன்றவை. பிறவினை விகுதி, செயப்படுபொருள் விகுதி, தொழிற்பெயர் விகுதிகள் முதலியவை புணர்ந்து கெட்ட முறைகள், பகு திப் பொருள் விகுதி, பாரிசேடம், அருத்தாபத்தி, இடத்து நிகழ் பொருளின் தன்மையை இடத்தின்மேல் ஏற்றிக் கூறுதல், காரணத்தைக் காரியமாகவும் காரியத்தைக் காரணமாகவும் கூறும் உபசார வழக்கு ஆகியவைகள் உரை களிற் காணப்படுகின்றன. அவற்றிற்கு விதி வகுத்து இலக்கணம் எழுது தல் இக் காலத்திற்கு ஏற்புடைத்தாகும்.

இலக்கண நூல்களின் விதிகளிற் சில மொழிநூலுக்குப் பயன்படு கின்றன. அவை ஒலிக்கும் முறைபற்றிய விதிகளாம். வைத்த என்பது வச்ச என்றும், ஆயிற்று என்பது ஆச்சு எனவும் மருவி வந்த சொற்கள் எளிமையாய் ஒலித்தல் பற்றிக் கொள்ளப்பட்டன. எனவே தகரமும் றக ரமும் சகரமாக ஒலிக்கப்படுகின்றன. இன்னோரன்ன விதிகள் பல உள. அவற்றைக்கொண்டே ஒரு மொழியில் ஒரு வகையாக ஒலிக்கப்படும் சொல் வேறொரு மொழியில் திரிகின்றது. தமிழில் 'குன்று' என்றும் 'என்று' என்றும் ஒலிக்கப்படும் சொற்கள் தெலுங்கு மொழியில் கொண்ட என்றும் எண்ட என்றும் ஒலிக்கப்படுகின்றன. சில சொற்களில் உகரச் சாரியை யும் அகரச் சாரியையும் மேற்கொள்ளப்பட்டுள்ளன. வள் + கடிது என் பதில் உகரம் வந்து வள்ளுக்கடிது என்றாகிறது. ள, ல ஆகிய எழுத்துக் களை ஈற்றில் கொண்டுள்ள முதனிலைத் தொழிற்பெயர்கள் வருமொழி யோடு புணருமிடத்து உகரச் சாரியை பெறுமென்னும் விதி இருக்கின்றது. இதுவும் ஒலித்தலின் எளிமைக்காகவே கொள்ளப்படுகிறது. சிலவற்றிற்கு அகரச் சாரியை உண்டு. அது வேற்றுமைப் புணர்ச்சி என்று அறிவித்தற்

காகக் கொள்ளப்படுகிறது. திரிதல், கெடுதல் முதலிய விகாரங்களும் எளிதில் ஒலித்தற்கும் அல்வழி வேற்றுமைப் பொருள் வேறுபாடறிதற்கும் வருகின்றன. மயக்க விதி இன்மையால் திரிந்தது என்று சொல்லுவதும் ஒலித்தலின் எண்மைக்காகவேயாம். திரிதல் முதலியன எழுத்துக்களின் பிறப்பிடத்து ஒற்றுமைபற்றியே உண்டாகின்றன. இவ்வாறு வரும் எழுத்துக்களை நட்பெழுத்தென்றும், பகையெழுத்தென்றும், இனவெழுத்தென்றும் கூறுவர். ஓரெழுத்துப் பிறக்கும் இடத்திற்கு அண்மையில் மற்றோரெழுத்துப் பிறக்குமாயின் அது நட்பெழுத்தாம். சேய்மையில் இருப்பின் பகையெழுத்தாம். ஒரே இடத்தில் இருப்பின் இனவெழுத்தாம். இம் முறையைக் கொண்டே பெரும்பாலும் மயக்க விதிகள் கூறப்பட்டுள்ளன. சொற்களின் அமைப்பைக் கொண்டும் மயக்கம் கூறுதல் உண்டு. மேற்கூறிய முறையில் சில ஒழிபுகளும் உண்டு. அவற்றை விரித்துக் கூறின் பெருகும்.

மயக்க விதிகளை ஒரு மொழியிற் கொள்வதா? தொடர் மொழியிலுங் கொள்வதா? என்பது பற்றிய கருத்து வேற்றுமை உரையாசிரியர்களிடை தோன்றியிருக்கிறது. இவற்றை ஒரு மொழிக்கண்ணே கொள்ளவேண்டுமென்றும், தொல்காப்பியர் காலத்தில் ஒரு மொழியிலேயே இவை அமைந்திருந்தனவென்றும், அவர் காலத்திற்குப்பின் அத்தகைய சொற்கள் வழக்கு வீழ்ந்தனவென்றார், அதனால் இவ்விதிகளை ஒருமொழி தொடர்மொழி ஆகிய இரண்டிலும் வைத்து அறிதல் வேண்டுமென்றும் கூறுகின்றனர். தொல்காப்பியர் காலத்தே அவை வழக்கில் ஒரு மொழியில் இருந்திருக்குமாயின் பிற்காலத்தில் தமிழ்மொழி பல்லாற்றானும் வேறுபட்டுவிட்டது என எண்ண இடம் உண்டு. அச்சொற்கள் எவை என ஊகித்தறிதல் எவர்க்கும் இயலாது. அவை கிடைக்குமேல் மொழியாராய்ச்சி வல்லுநர்க்குப் பெரிதும் விருந்தென மகிழ்ச்சி தரும். இவற்றைக் குறித்து இலக்கண வரலாறு என்னும் நூலில் எழுதுவதால் இதனை இம்மட்டோடு நிறுத்திக் கொள்கிறேன்.

~~~~~~~~~~
~~~~~~~~~~

ஓம்

# 'இலக்கியங்களில் அகப்பொருள்'

M. S. Kesavan, B.O.L. (Hons.) Chief lecturer in Tamil.

## (1)

தனக்கெனத் தனிச் சிறப்பியல்புகளோடு கூடிய இலக்கிய வளம் தமிழுக்கு இருத்தல் அனைவரும் அறிந்ததே. எண்ணத்திலும் வெளியீட்டு முறையிலும் தமிழ் மொழிக்கு அமைந்துள்ள தனி மரபுகள் அம்மொழியின் பண்பாட்டையும் நாகரிக வளர்ச்சியையும் விளக்கவல்லன. சங்கப் புலவரும் திருவள்ளுவரும் இளங்கோ அடிகளும் உலகம் முழுவதற்குமே வாழ்வுக்கு வழிகாட்டிகளாவர். காலத்தையும் வென்று இவர்கள் விளங்கக் காரணம் இவர்தம் கருத்துக்கள் பொதுத்தன்மை பெற்று எக்காலத்திற்கும் தேவையானவையாக இருப்பதே.

> " பழையன கழிதலும் புதியன புகுதலும்
> வழுவல கால வகையி னானே "

என்ற உண்மைக் கிணங்க, இவ்விருபதாம் நூற்றாண்டில் வாழ்வின் போக்கு விரைவாக மாறுதல் அடைந்து வருகிறது. சென்ற ஆண்டில் வெளியான கருத்து இந்த ஆண்டில் பழையதாகிப் புறக்கணிக்கப்படுகிறது. விடுதலைக் குப்பின் நம் நாடும் முன்னேற்றப் பாதையில் விரைந்து சென்றுகொண்டிருக்கிறது. பழைய வாழ்வின் போக்கு மாறிவருகிறது. பாராளுமன்றங்களின் சட்டங்கள் புதியவாழ்வுக்கு வழிகோலி வருகின்றன. இந்திய சமுதாய வாழ்வில் பல புதிய நிலைமைகள் உருவாகின்றன. பாரதி கற்பனையில் கண்ட புதுமைப் பெண் இப்போது பலரும் கனவில் காணாப் பெண்ணாக வளர்ந்து வருகிறாள். மேலை நாட்டு நாகரிகமும் கீழை நாட்டு நாகரிகமும் இரண்டறக் கலந்து ஒன்றாகும் சூழ்நிலை ஏற்பட்டு வருகிற தெனில் மிகையாகாது.

நாட்டில் இப்போது ஆண் பெண் உறவில் புரட்சித் தன்மைவாய்ந்த மாறுதல்கள் ஏற்பட்டு வருகின்றன. பல்கலைக் கழகங்களின் வாயிலாகப் "பால்" (Sex) பற்றிய கல்வியைக் கற்பிக்க முயலுகிறது அரசாங்கம். இனி வரும் இல்லற வாழ்வில் ஆண் பெண் இருவருக்கும் வாழ்வில் ஒத்த உரிமைகளும் கடமைகளும் இருக்கும். பொதுவாகப் 'பால்' பற்றிய கல்வியில் உடல் பற்றியும் உள்ளம் பற்றியும் இன்றியமையாத உளநூல் உண்மைகள் (Psychological facts) கற்பிக்கப் பெறுகின்றன. உளநூல் அறிஞருள் பிராய்டு (Fread) போன்றவர் மனிதனுக்கு அடிப்படை உணர்ச்சி

இவ்வகைப் பொருள் இலக்கியங்களுக்கு இலக்கணமும் ஏற்பட்டிருக்கிறது. தொல்காப்பியனார் தம்பொருளதிகாரத்துள் பெரும்பாலும் அகப்பொருளையே பல நிலைகளில் விரித்துப் பேசியுள்ளார்.

பொதுவாகக் காதல் மூவகையாகப் பிரிக்கப்படும். கைக்கிளை என்னும் ஒருதலைக்காமம், பெருந்திணை என்னும் பொருந்தாக் காமம், ஐந்திணை என்னும் அன்புடைக்காமம் என்பன அவை. இவற்றுள் கைக்கிளை ஆண் பெண் இருவருள் ஒருவர் மட்டுமே கொண்ட காதல் உணர்ச்சியைப் பற்றிப் பேசுவது; பெரும்பாலும் ஆண்மகனுடைய உள்ளத்துணர்வாகவே வெளியாவது. பெருந்திணை காதலருள் ஏற்றத்தாழ்வான உணர்ச்சிகளும் விருப்பு வெறுப்புணர்ச்சிகளும் பற்றிப் பேசுவது. இவ்விரண்டு வகைகளும் பற்றிய பாடல்கள் மிகமிகக் குறைவே. மூன்றாவதான அன்புடைக் காமமே காதலரிடைத் தோன்றும் தூய, உயர்ந்த அன்பை விளக்குவது. ஐந்து பிரிவுகளாகப் பிரிக்கப்படுதலின் ஐந்திணை என்று இது பெயர் பெற்றது. அவ்வைந்து பிரிவுகள் எவை?

காதலர்களின் சந்திப்பு குறிஞ்சி என்றும் பிரிவு பாலை என்றும் கூறப்படும். பிரிவாலே ஆறியிருந்து அமைதி காத்தல் முல்லை என்று கூறப்படும். பிரிவு முதலியனகாரணமாக ஏற்படும் பிணக்கு மருதம் எனப்படும். வரம்பு மீறும் அளவை எட்டும் துயரம் நெய்தல் எனப்படும். இவை வரம்புக்குட்பட்டு அன்பைப் போற்றி வளர்த்தலின் அன்பின் ஐந்திணை எனப்பட்டன. இவ்வைந்து உணர்வுகளுக்கான சூழ்நிலைகளும் இப் பிரிவினையில் அடங்கும். இந்த ஐந்தினும் வேறாகத் தனியே காதல் வாழ்வில் வேறு பிரிவினைகளைப் பார்த்தல் கூடுமோ? மேலும் ஒத்த அன்புடையார் வாழ்விலேயே இத்தகைய நுட்பமான உணர்வுகள் கொண்ட பிரிவினைகளைக் காண முடியும்.

அகப்பொருளை அடிப்படையுணர்வு என்பதற்கேற்ப இவ்வைந்து பிரிவினைகளையும் புறவாழ்விலேயும் காண்டல் இயலும். அகமே புறமாக விரிகிறது அன்றோ? கூடி மகிழ்தலும், பிரிந்து புலம்பலும், ஆறி அமைதியடைதலும், பிணங்கி மாறுபடுதலும், நம்பிக்கையிழந்து நெஞ்சு நெக்குருகுதலும் வாழ்வில் பிற துறைகளிலும் காண்கின்றோம் அல்லமோ?

இவற்றுள் ஏதேனும் ஓர் உணர்வை வெளியிடும் கருவியாக அமைகின்றன சங்கப்பாடல்கள். இப்பாடல்கள் பலவும் உள்ளத்துணர்வு ஓவியங்களே அன்றி, உடல் உணர்ச்சியையோ, பிறபகட்டுப் புனைவுகளையோ வெளியிடுவன அல்ல. பாடல்களில் இவ்வுணர்வு வெளியாகும் முறையை விளக்கி அதனால் அவை எவ்வாறு உள்ளத்துணர்வுக்கு விருந்தளிக்கின்றன என்பதை ஆராய்வதற்கு முன்னர் இவ்வகைப்பொருள் கூறும் வாழ்க்கை அமைப்பை விளக்குதல் பயனுடையதாகும்.

## (3)

இன்றுள்ள வாழ்வின் போக்கு ஆண் பெண் இருபாலார்க்கும் ஒத்த உரிமையளிப்பது. இவ்வகப்பொருள் காலத்துச் சமுதாய அமைப்போ பெண்ணுக்குக் கட்டுப்பாட்டையும் ஆணுக்கு மட்டுமே வெளியுலகில் உரிமையையும் அளிப்பது. வயது வந்த பெண்ணுக்கு எந்த அளவுக்குக் கட்டுப்பாடுகள் இருந்தன என்பதற்கு அவளும் அவள் குடும்பத்தாரும் அயலாரின் அலர்ச் சொற்களுக்கு அஞ்சுவதே சான்றாகும். ஆயினும் அவ் வாழ்வில் உள்ள தனிச் சிறப்பு என்ன என்றால் பெண்ணுக்குத் தன் கணவனைத் தேர்ந்தெடுத்துக்கொள்ளும் உரிமை இருந்தது என்பதே. இனி அவ் வாழ்வின் அமைப்பைக் காண்போம்.

கொடுப்பாரும் அடுப்பாரும் இல்லாமல் தலைவனும் தலைவியும் விதி கூட்டத் தாமே தனியிடத்தில் எதிர்ப்பட்டுக் காதலர் ஆகின்றார்கள். தலைவியின் தோழி இவர்களுடைய களவொழுக்கத்தைக் குறிப்பாக உணர்ந்து கொள்கிறாள். இவள் தலைவனுடைய வேண்டுகோளையும், தலைவியின் விருப்பத்தையும் மதித்து அவர்களுடைய களவு வாழ்வுக்கு உதவுகிறாள். இப்படிப் பொறுப்பை ஏற்றுக்கொள்ளும் தோழிக்கு அவ்வப்போது தலைவனுக்கு அறிவுரை கூறித் திருமணம் செய்துகொள்ளத் தூண்டும் கடமை ஏற்பட்டு விடுகிறது. இது களவு வாழ்க்கை எனப்படும்.

திருமண முயற்சியால் பயன் ஏற்படாதபோது தலைவன் தலைமகளை அழைத்துக்கொண்டு வெளியூர் போய்விடுவது உண்டு. அல்லது திருமண முயற்சி ஏதோ காரணத்தால் தடைப்படும்போது எல்லாரும் அறியக்களவை வெளிப்படுத்துவது வழக்கம். இவ்வாறு வெளிப்படுத்துவதற்கு அறத்தொடு நிற்றல் என்று பெயரிட்டிருக்கும் பொருத்தம் அறிந்தின்புறத்தக்கது. இவையெல்லாம் இன்றித் திருமண முயற்சி எளிதில் நிறைவேறுவதும் உண்டு. இது வரைவியல் எனப்படும். இதனைக் காதல் வாழ்வில் இரண்டாவது படி என்னலாம்.

மூன்றாவதாகக் கணவன் மனைவியர் நடத்தும் இல்லற வாழ்வைப் பற்றிப் பேசுவது கற்பியல் எனப்படும். இல் வாழ்க்கையில் மகிழ்ச்சி, தலைவன் பரத்தையரை நாடுவதால் தலைவியின் பிணக்கம், கடமைகள் காரணமாகத் தலைவன் பிரியும்போது ஏற்படும் பிரிவுணர்ச்சி முதலானவை இப் பிரிவில் அடங்கும். காதல் வாழ்வில் இது மூன்றாவது படி.

இக் காலத்திலும் இம் மூன்று வகையான படிகள் இல்லாமல் இல்லை. இன்றும் காதல் தோன்றி வளருவதில் போராட்டம், திருமணமாக உருப்பெறும் நோக்கில் போராட்டம், இல்வாழ்வில் அது வாழ்வு பெற்று விளங்கப் போராட்டம் எனப் போராட்டங்களைக் காண்கிறோம். கவர்ச்சியும்

பகட்டும் மிகுந்துள்ள இக் காலத்திலே கணவன் மனைவியராகி நடத்தும் இல்வாழ்க்கையிலும் காதலைக் காப்பாற்றப் போராட்டம் தேவையாகிறது.

பண்டைக் காலத்துக் காதல் வாழ்வின் உயிர்நாடிகள் என்று சொல்லத் தக்கவை இரண்டு. அவை தலைவனுடைய சான்றாண்மையும் தலைவியி னுடைய நம்பிக்கையும் ஆகும். இவ்விரண்டில் ஒன்றில்லாவிட்டாலும் காதல் வாழ்வுக்குப் பெரிய தோல்வி ஏற்பட்டு விடும். திருமணம் என்னும் சடங்கே சமுதாயம் அவ்வாழ்வுக்கு அளிக்கும் "அங்கீகார முத்திரை" ஆகும். இத்தகைய வாழ்வில் ஏற்பட்ட சில தவறுகளின் விளைவாகவே திருமணம் என்னும் சடங்கு தோன்றியதாகக் கருதுகிறார் தொல்காப்பியர்.

> "பொய்யும் வழுவும் புகுந்த பின்னர்
> ஐயர் யாத்தனர் கரணம் என்ப"—(தொல்-கற்பு)

கொடுப்பாரும் அடுப்பாரும் இன்றித் தாமே சந்தித்துக் கூடுவதன் வாயிலாகக் காதல் தோன்றுகிறது. தோழியின் உதவியால் அது வளர் கிறது. பகலில் ஊரை அடுத்தும் இரவில் வீட்டை அடுத்தும் உள்ள இடங் களில் காதலர் சந்திப்பு நிகழ்கிறது. இதனால் அண்டை அயலாரும் பின் ஊராரும் மறைவாகவும் வெளிப்படையாகவும் பழி தூற்றத் தொடங்கு கிறார்கள். அதனால் தலைவன் சிலகாலம் தலைவியைக் காணாமலேயே இருக் கிறான். அவன் பிரிவைக் கேள்விப்பட்ட அளவிலேயே தலைவியுள்ளம் நெகிழ்ந்து போகிறது. அலர் தூற்றுதலுக்கஞ்சி அகன்று சென்றவன் திரும்பி வாராமலேயே திருமண முயற்சியை மேற்கொள்ளாமலேயே இருந்துவிட்டால் தலைவியின் கற்புநிலை என்னவது? அவனிடம் அவள் கொண்ட நம்பிக்கை தவிர வேறு வழியுண்டோ? தலைவி தோல்விக்கு விடை கூறுவது போன்ற கருத்தமைந்த பாடல் ஒன்றைப் பார்ப்போம்.

> "யாரும் இல்லை தானே கள்வன்
> தான் அது பொய்ப்பின் யானெவன் செய்கோ?
> தினைத்தாள் அன்ன சிறுபசுங் கால
> ஒழுகுநீர் ஆரல் பார்க்கும்
> குருகும் உண்டுதாம் மணந்த ஞான்றே" —(குறுந்தொகை)

நாரை ஒன்றே சான்று. அந்த நாரையும் மீன்களின்—அதுவும் ஆரல் மீன் களின்மேல் மட்டும்—எண்ணத்தைச் செலுத்தியிருந்ததே தவிர, காதலர் கள் அங்கே இருந்ததைக் கண்டதாகக்கூடத் தெரியவில்லை. தலைவியின் உள்ளத்தை உறுத்தியதெல்லாம் "தான் அது பொய்ப்பின் யான் எவன் செய்கோ?" என்பதே. இன்றும் இக்கேள்விக்கு இடம் இல்லையோ? காதலைத் தூய்மையானதாகக் கருதும் எவரும்—காதல் வாழ்வில் ஏமாற் றத்தை விரும்பாத எவரும்—அன்பிலே கொள்ளும் நம்பிக்கை ஒன்றையே

அரணாகக் கருதமுடியும். இப் பண்புடையவர்க்குப் பொறுப்புணர்ச்சியும் தாமாகவே அமைந்துவிடும்.

அறநெறிக்கு மாறுபட்ட எதுவும் தூய்மையானதாக இருத்தல் இயலாது. தூய்மையுள்ள விடத்தில் பொங்கியெழும் இன்பமே நிலைபெற்றது; துன்பத்தில் சென்று முடியாதது. அங்கேயும் ஒருவகைத் துயரம் உண்டெனினும், அத்துன்ப அலைகளினூடே இன்பத் துடிப்புக்களை உணர்தல் இயலும். இறைவனை எண்ணி எண்ணிக் கசிந்துருகுதலில் அடியவர்கள் இன்பம் காண்கின்றார்கள் அல்லரோ? பெரிய அளவில் கலப்படமான இன்பம் பெறுவதைக் காட்டிலும் சிறிய அளவில் தூய இன்பம் பெறுதலே சிறந்தது என்பர் அறிஞர் பிளேட்டோ. திருவள்ளுவரும் இதனை,

“அறத்தான் வருவதே இன்பம் மற்றெல்லாம்
புறத்த புகழும் இல” —(திருக்குறள் அறன் வலியுறுத்தல்)

என்று தெளிவாக்கி யிருக்கிறார். திருமண முயற்சியை மேற்கொள்ளாமலே களவொழுக்கத்திலே தலைமகளை நாடிவரும் தலைமகனுக்குத் தோழி கூறும் அறிவுரை இங்கே ஒப்பிட்டு நோக்கத் தக்கது.

தலைவன் வருவது ஒருநாள் தடைப்படினும் தலைவி பொறுப்பதில்லை. அவ்வாறே அவனுக்கும் அவளைக் காணாமல் இருத்தல் இயலாது. ஆயினும் அதற்காகப் பழியையும் பொருட்படுத்தாமல் இவ்வாறு அபாயத்துக்கிடனை வழியைக் கடந்து தனியாக இரவில் அவன் வருவது நல்லதோ? அதனால் அவன் அவளுக்கு நன்மைக்கு மாறாகத் தீங்கு செய்கிறான் என்றன்றோ கூறுதல் வேண்டும்? காதல் உணர்ச்சி கடலினும் பெரிது என்பதற்காகச் சான்றோர் பழியோடு கலந்த இன்பத்தை விரும்புவரோ? இதுவே தோழியின் கேள்வி.

“கழியக் காதலர் ஆயினும் சான்றோர்
பழியொடு வரூஉம் இன்பம் வெஃகார்” —(அகநானூறு களிற்.)

இவ்வாறு அறிவுறுத்தித் திருமண முயற்சியை மேற்கொள்ளத் தூண்டுகிறாள் தோழி.

## (4)

இத்தகைய தூய இன்ப அன்பினை மேலே குறிப்பிட்டவாறு ஐவகை ஒழுக்க உணர்வுகளுள் ஒன்றாகப் பாடல் வாயிலாக வெளியிட்டனர் சங்க காலத்துப் புலவர்கள். அவ்வுணர்வுகளை வெளியிடுவதற் கேற்ற சூழ்நிலைகளை அவர்கள் அமைத்துக்கொள்ளும் திறன் காணத்தக்கது.

எந்தெந்த நிலத்தில் எவ்வெக்காலத்தில் எந்தெந்த ஒழுக்கம் சிறப்படைகிறது என்றெண்ணி அவ்வவ் வொழுக்கவுணர்ச்சியை அவ்வச் சூழ்

நிலையிலேயே வெளியிடுவது தக்கது என்று இலக்கணம் வரையறை செய்கிறது. காதலர் கூடி மகிழும் நிலையை விளக்குமிடத்து மலைப்பகுதியும் மழைக்காலத்து நள்ளிரவும் சூழ்நிலையாக அமைகின்றன. பிரிவுக்குச் சூழ்நிலை வேனிற்காலமும் நண்பகலும் வறண்ட மலைநாட்டுப் பகுதியும் ஆகும். ஆற்றிருத்தலுக்குச் சூழ்நிலை கார்காலத்து மாலைப்பொழுதும் அடர்ந்த கானமும் ஆகும். இவ்வாறே ஊடலுக்குச் சூழ்நிலை வயல்வளம் மிகுந்த ஊர்ப்பகுதியும் காலைநேரமும், இரங்கலுக்குச் சூழ்நிலை கடற்கரையும் முன் மாலைப்பொழுதும் ஆகி நம் முருகியல் உணர்வுக்கு (aesthetic sense) விருந்தளிக்கின்றன.

இச் சூழ்நிலைகளுக்கும் ஒழுக்க உணர்வுகளுக்கும் ஏற்பட்டிருக்கும் இலக்கண விதிகளின் பரப்பையும் மிகுதியையும் நோக்குமிடத்து அத் துறையில் பாடல் புனைவதன் அருமையை அவர்கள் எவ்வாறு போற்றியுள்ளனர் என்பது புலனாகும்.

இறையனார் களவியல் என்ற நூலுக்குப் பாயிரம் கூறும் உரையாசிரியர் 'களவியல்' என்றதன் பெயர்க் காரணத்தை விளக்குவது ஈண்டு காணத்தக்கது. சமயக் கண்கொண்டு கூறும் அவர் கருத்து ஓரளவு நமக்கும் துணைசெய்கிறது. "மூன்றும் தாத்தினராகிய தாழ் நிலையிலுள்ள மக்கள் எவ்வகையாலும் காமத்தைக் கைவிடார். ஆகவே அவர்க்கு உயர்ந்த காமம் இன்னதென்பதைக் காட்டவே இந்நூல் எழுந்தது. அப்போது அத்தகைய உயர்ந்த காதல் வாழ்வைப் பெறத் தவம் செய்யவும் துணிந்து நிற்கும் மனிதனுக்குப் பேரின்பத்தை விளக்கிக் காட்டி அதனைப் பெறுமாறு அறிவுரை கூறுவது எளிது. அவனும் எளிதில் பேரின்பத்தைப் பெற விரும்புவான். இவ்வாறு அவனை வஞ்சித்து உயர்நிலைக்கு அழைத்துச் செல்வதனால் களவியல் என்று இது பெயர்பெற்றது." இங்கே நமக்கு வேண்டுவதெல்லாம் இதில் கூறப்படும் காதல் வாழ்வு உயர்ந்தது-பண்பட்டது என்பதே. இத்தகைய உயர்ந்த காதல் வாழ்வு இவ்வுலகில் அருமையாதலைக் கருதியே இது 'இல்லது, இனியது, நல்லது, புலவரால் நாட்டப்பட்டதோர் ஒழுக்கம்' என்று அவ்வுரையாசியரால் கூறப்பெற்றது. மேலும் இதனை இயற்றிய புலவர் இறையனாரை ஆலவாய் அழல்நிறக் கடவுளாகக் கொண்ட மரபின் அடிப்படைக் கருத்தும் இங்கே ஒப்பிட்டுக் காணத்தக்கது. காதலுக்கு இலக்கணம் வகுக்க வல்லவர் கடவுளே என்பது கருத்துப்போலும்!

இங்கே எடுத்துக் காட்டாகப் பிரிவுணர்வின் பகுதியாகிய பாலைத் திணையின் அமைப்பைக் காண்போம்:

வேனிற்காலம்; கோடையின் வெப்பத்தால் நீர்நிலைகள் வறண்டு போகின்றன. ஓரறிவுயிர்களான மாஞ்செடி கொடிகளும் வாடிவதங்கு

கின்றன. சில மரங்கள் உலர்ந்தும் போகின்றன. யானைகள் மான்கள் முதலிய விலங்குகள் நீர்தேடி அலைகின்றன. புலி சிங்கம் முதலியவை இரைதேடிச் சோர்கின்றன. வழிப்பறி செய்வோர் வழிப்போக்கரை வளைத்துக் கொன்று பொருள்களைச் சூறையாடுகிறார்கள். வழிப்போக்கரின் பிணங்களை மூடிய கற்குவியல்கள் அங்கங்கே நின்று அச்சுறுத்துகின்றன. அந்நிலத்து வீரர்கள் இரவில் திருட்டுத்தனமாக அண்டை அயலில் வளமான ஊர்களிலிருந்து ஆனிரைகளைக் கவர்ந்து வருகிறார்கள். இப்படியாகப் பாலை நிலத்துச் சூழ்நிலை ஒரே போராட்டமாக அமைந்திருத்தலைக் காண்கிறோம். நிலப்பகுதியின் வளத்துக் கேற்றவாறு வாழ்வின் சூழ்நிலையும் அமைதல் இயல்பன்றோ? நீர்வளம் மிகுந்த ஆற்றங் கரைப் பகுதியே வளத்திற்கும் நாகரிகத்திற்கும் ஏற்ற இடமாக அமைவது. அறம் அன்பு சமுதாய உணர்ச்சி ஆகிய இவற்றின் வளர்ச்சியை அங்கேயே காண்கிறோம். அத்தகைய இடத்திலேயே அரசியல் உருவாகி வேந்தன் தோன்றுகிறான். மருத நிலத்துக்குத் தெய்வம் வேந்தன் என்பது ஈண்டுக் குறிப்பிடத்தக்கது.

பாலையிலும் வேந்தன் ஒருவனைக் குறிப்பிடுகிறார் ஒரு புலவர். இவனுக்கும் மருதநிலத்து வேந்தனுக்கும் ஒரு வேறுபாடு. இவன் அறன் இல் வேந்தன். இவன் இயல்பும் வேறுபட்டது. புலவர் இவன் இயல்பையும் நாட்டையும் பின்வருமாறு வருணிக்கிறார். இவ் வேந்தன் ஆளுகையில் வழிப்பறி செய்வோரே குடிமக்கள். வழிப்போக்கரிடம் பொருள் இல்லா விட்டாலும் அவரைக்கொன்றுவிட வேண்டியது இவர்பணி. அப்படிக் கொல்லாமல் அவரைக் காப்பாற்றிய குற்றத்துக்காகத் தம் அரசனுக்கு யானை மருப்பும் புலித்தோலும் தண்டம் செலுத்துகிறார்கள் இவர்கள். இத்தகைய அறனில்லாத வேந்தன் ஆளுகைக்குட்பட்டவை வளமில்லாத குன்றுகள்.

> " கைப்பொருள் இல்லை யாயினும் மெய்க்கொண்டு
> இன்னுயிர் செகாஅர் விட்டுஅகல் தப்பற்குப்
> பெருங்களிற்று மருப்பொடு வரிஅதள் இறுக்கும்
> அறனில் வேந்தன் ஆளும்
> வறன்உறு குன்றம் பலவிலங் கினவே " (109. அகநானூறு)

இத்தகைய கானகத்திலே பொருள் தேடுவதற்காகத் தனியே செல்கிறான் தலைவன். பிரிவுத் துன்பம் ஒரு புறமும், பொருள் தேடுவதில் உள்ள ஊக்கம் ஒருபுறமும் அவன் நெஞ்சத்தை நிலைகொள்ளாதவாறு அலைக்கின்றன. தலைவியோ போதுமென்ற பொன்னான மனப்பான்மையுடையவளாயினும் தலைவனுடைய முயற்சியுள்ளத்திற்குத் தடைசெய்பவள் அல்லள். ஆயினும் காதல் உணர்வு அவளுடைய அறிவையும் விழுங்கிவிட்டு அவளை அலைக்கழிக்கிறது. மேலும் அபாயம் நிறைந்த பாலை நிலத்து வழி

யில் அவனுக்கு என்ன நேருமோ என்ற அச்சம் வேறு அவளுக்கு. இப்படிப் போராடும் சூழ்நிலையில் அவர்களுடைய அன்பு தூய்மையையுடைய 'ஆகாயகங்கை' போல் வெள்ளமாகப் பெருக்கெடுக்கிறது பாலைப்பாடல்களிலே.

எடுத்துக்காட்டாக அகநானூற்றுப்பாடல் ஒன்றைக் காண்போம். கோடைக் காலத்து மாலைக்காலத்திலே பிரிவாற்றாத தலைவி யொருத்தியின் மனப்பண்பு இப்பாடலின் வாயிலாக வெளிப்படுகிறது. தலைவனோ பொருள் கருதி நெடுந்தொலைவிலுள்ள நாடுகளுக்குப் பிரிந்து சென்றுள்ளான். அதன் கருத்துக் கீழ் வருமாறு :—

"நடுவுநிலை இல்லாதவர்கள் ஏழைகளைக் கைவிட்டுப் பொருள் உடையவரை நாடுவதுபோல், சுனைப் பூக்களைக் கைவிட்டுச் சினைப்பூக்களிலே வண்டுகள் முரல்கின்றன.

குற்றமற்ற மான் கூட்டங்கள் மருண்டு மருண்டு பார்க்கின்றன.

வெந்து சுடர்விடும் பொன் மெல்லமெல்ல ஆறி வருவதைப் போல் அந்திப்பொழுது பூத்திருக்கிறது.

அகன்ற வானத்திலே அழகிய, கரிய மேகங்கள் திரள்கின்றன. அறிவு நிறைந்த நெஞ்சத்திலே செயல்அற்றுப்போக இருள் சூழ்கிறதே! கதிரவனுக்கு விடைகொடுத்துவிட்டுக் கடுந்துன்பம் தரும் மாலைப்பொழுது வந்துவிட்டதே!

காதலனைப் பிரிந்த தனிமை வருத்துகிறது. நிறைந்த துன்பத்தால் நெக்குருகும் நெஞ்சத்திலே, குறிபார்த்து வேலை எறிவாரைப்போல் மாலை வருத்துகிறதே!

தூய்மையான கண்ணாடியிலே ஊதிய ஆவி சிறிது சிறிதாகச் சுருங்குகிறதே போன்று என் மனவல்லமையும் மாய்ந்துவிடுமோ?

கொடிய புயல்காற்றுச் சீறுகிறது; ஊசலாடுகின்றன மரங்கள். உயிர்க்குத் துடிக்கின்றன அங்கே வாழும் பறவைகள். என்தோழீ! அதுபோல் நான் உளமழிந்து உயிர்துறக்கும் பொழுது இதுதானோ?"

விரிவுரை வரைவதனால் இப்பாடலின் அருமையை எடுத்தியம்புதல் இயலாது. உணர்வுச் செல்வம் வாய்க்கப் பெற்றவர் சிறிது ஊன்றிக் கண்டாலும் கோடைக்காலத்து அந்திமாலை அவர்மனக் கண்ணுக்குப் புலனாகாமல் இராது. இப்பாடலைப் பாடியவர் அந்தி இளங்கீரனார் என்பவர். அந்தியைப் பாடிய சிறப்பால் அச்சொல் அவர் பெயருக்கு அடைமொழியாகவே அமைந்து விட்டது.

(5)

இவ்வாறு இயற்கைச் சூழ்நிலைகளுக்கிடையே பகட்டில்லாத தூய உள்ளத்துடிப்பைத் தன்மை நவிற்சியாகத் தீட்டும் சொல்லோவியங்கள் சங்கப்பாடல்கள். இயற்கையை அடியாகக் கொண்ட சூழ்நிலையில் இயற்கைப் பொருள்கள் உள்ளத்துடிப்புக்களோடு உறவாடுதலை இப்பாடல்களில் இயல்பாகக் காணலாம். "வோர்ட்ஸ் வொர்த்" (Wordsworth) என்ற ஆங்கிலக் கவிஞருக்கு இயற்கையிலுள்ள காதல் சங்கப்புலவருக்கு இயல்பாகவே அமைந்திருத்தல் இப்பாடல்களுக்கு மற்ருெரு தனிச் சிறப்பாகும். இரண்டாயிரம் ஆண்டுகளுக்கு முற்பட்ட பாடல்கள் இவை என்பதை இங்கே நினைவில் கொள்ளுதல் நலம். ஒரே ஓர் எடுத்துக் காட்டு. மாமூலனர் மனத்தில் முகிழ்த்த கற்பனை இது.

அகன்ற கானகம். வானம் கடலாகக் காட்சி தர, கதிரவன் அதில் ஓடமாக மிதக்கிருன். கானல் நீரைக் கண்டவருக்கு வானம் கடலாகக் காட்சியளிப்பதில் வியப்பென்ன ?

நண்பகல் வெயில் கொளுத்துவது போல் காய்கிறது. வெப்பத்தின் அளவு மிகுந்துகொண்டே போகிறது. அதனைத் தணிப்பது போன்று கோடைக் காற்றுச் சுழன்றடிக்கிறது. அதனால் உதிர்ந்து உதிர்ந்து பறக்கின்றன முருங்கை மரத்து முதிர்ந்துபோன மலர்கள்.

அதனைப் பார்க்கும்போது திடீரென்று ஒரு மருட்சி பிறக்கிறது. கோடைக்காலம் கண்ணுக்கு மறைந்து கார்காலம் தோன்றுகிறது. அந்த முதிர்ந்துபோன முருங்கை மலர்கள் குளிர்ந்த அக் கார்காலத்தில் சிதறும் ஆலங்கட்டிகளாகத் தென்படுகின்றன.

இப்படி வெப்பம் மிகுந்த கோடைக்காலத்து நண்பகலில் குளிர்ச்சி மிகுந்த கார்காலத்து மழையும் கடலும் ஓடமும் தோன்றி மருட்சியைத் தோற்றுவிக்கின்றன. துன்பம் நிறைந்த மனம் உடனே இன்பத்தை நோக்கிப் பாய்தல் நாம் கண்கூடாக உணர்ந்துள்ள உண்மை. அவ்வாறே துன்பமே நிறைந்த சூழ்நிலையைக் கற்பனை செய்யும்போது தலைவியாருத்திக்கு இடையே தோன்றிய மருட்சி இது.

> " அகல் இரு விசும்பிற்கு ஓடம் போலப்
> பகல் இடை நின்ற பல்கதிர் ஞாயிற்று
> உருப்பு அவிர்பு ஊரிய சுழன்றுவரு கோடைப்
> புன்கால் முருங்கை ஊழ்கழி பன்மலர்
> தண்கார் ஆலியில் தாவன உதிரும் " —[அகநானூறு(களிற்)]

இவ்வாறு இன்ப வாழ்வு பற்றிய கற்பனைவளம் நிறைந்த பாடல்களைக் கொண்டது சங்க இலக்கியம். இவ்விருபதாம் நூற்றாண்டில் இவைபற்றிப்

புதிய துறையில் ஆராய்ச்சி செய்வது இன்றியமையாதது. இவற்றை உள நூல் உண்மைகளொடு பொருந்த, விழிப்புணர்ச்சியோடு ஆராய்ந்தால், இவை 'பால்' (Sex) பற்றிய கல்வியில் இன்றியமையாத இடம் பெறுவ தோடு பண்பட்ட சமுதாய வளர்ச்சிக்கும் உறுதுணையாகும் என்பதில் ஐய மில்லை. சுருங்கக் கூறின் அறநெறியும் அன்பு நெறியும் பிணைந்தோரு வாழ்க்கை அமைப்பை இப்பாடல்களில் நாம் காண்கிறோம். போலும் இவ் வாறு காதலுக்கென்றே தனி இலக்கிய வகையைப் படைத்து, அதன் தூய்மை கெடாமல் போற்றி வளர்த்துள்ள சிறப்பு உலக இலக்கிய வளர்ச் சிக்கு உரம் ஊட்டத்தக்க தகுதிவாய்ந்தது. உலக இலக்கிய வளர்ச்சிக்குத் தமிழ்மொழியின் தனிச்சிறப்பு வாய்ந்த காணிக்கையாக இதனை மதித்தல் பொருத்தமாகும்.

அந்தி இளங்கீரனார் பாட்டுப் பின் வருமாறு:—

"நிறைந்தோர்த் தேரும் நெஞ்சமொடு குறைந்தோர்
பயனின் மையின் பற்றுவிட்டு ஒரூஉம்
நயனின் மாக்கள் போல, வண்டினம்
சுனைப்பூ நீத்துச் சினைப்பூப் படர,
மையில் மானினம் மருள, பையென
வெந்துஆறு பொன்னின் அந்தி பூப்ப,
ஐயறிவு அகற்றும் கையறு படரொடு
அகல்இரு வானம் அம்மஞ்சு ஈன,
பகல்ஆற்றுப் படுத்த பழங்கண் மாலை
காதலர்ப் பிரிந்த புலம்பின் நோதக
ஆர்அஞர் உறுநர் அருநிறம் சுட்டிக்
கூர்எஃகு எறிஞரின் அலைத்தல் ஆனாது.
எள்அற இயற்றிய நிழல்காண் மண்டிலத்து
உள்ஊது ஆவியின் பைப்பய நுணுகி
மதுகை மாய்தல் வேண்டும், பெரிது அழிந்து
இதுகொல்! வாழி தோழி, என்உயிர்
விலங்கு வெங் கடுவளி எடுப்பத்,
துளங்கும் மரப்புள்ளில் துறக்கும் பொழுதே"

[குறைந்தோர் - ஏழைகள். ஒரூஉம் - நீங்கிவிடும். பயன்இல் - நன்மை இல்லாத. பையென - மெல்ல. கையறுபடர் - செயல் அற்றுப் போகச் சூழும் துன்பம். மஞ்சு - மேகம். பழங்கண் - துன்பம். நோதக - துன் பம் உண்டாக. ஆர்அஞர் - நிறைந்த துன்பம். அருநிறம் - அரிய மார்பு. எஃகு - வேல். எறிஞர் - எறிவோர். நிழல்காண் மண்டிலம் - ஒளிவிடும் கண்ணாடி. மதுகை - வலிமை. கடுவளி - சூறைக் காற்று. புள் ளில் - பறவை [illegible]ப் போல.]